யுபர்தவக்குறுமுனியுதிபுண்டவன்
பெயரினில்மனஞ்செலப்பிரியமாகியே. (௭௬)

கடமுனிவரன்றனைக்காணவேணுமென்
றுடனெழுந்தருளினாருடையசீடர்பின்
றொடரவான்விளங்கியசோதிமொய்த்திடும்
வடவரைதனைநிகர்மலையமேவினார். (௭௭)

பாவினாசர்தம்பாதம்போற்றியே
சேவைசெய்தாங்கமர்தெய்வமாமுனி
மூவுலகேத்திடுமுனிசிரேட்டனாய்
மேவியகும்பனைவியந்துகண்டபின். (௭௮)

அண்ணலைப்பாவினாசராகிய
புண்ணியப்பொருளைமெய்ப்பொருளைப்பொற்புறு
கண்ணுதறனையின்பக்கருணைவாழ்வினை
மண்ணுறவெட்டஞ்சுவகையிற்போற்றியே. (௭௯)

எழுந்துசெஞ்சடைமிசையிருகைகூப்பியே
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்கிடச்
செழுந்திருவிழிபுனற்சிந்தவின்பத்தி
லழுந்தியேமெய்பரவசமுமாகியே. (௮௰)

(வேறு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உமையொருபாகாபோற்றியுயிர்க்கின்பமளிப்பாய்போற்றி
யமைவில்விசேடமானவறிவுசொரூபாபோற்றி
விமலனேயுயிர்கட்கெல்லாம்விசுவசாட்சியாகி
யிமையவர்போற்றிநின்றயிறைவனேபோற்றிபோற்றி. (௮௧)

மூன்றுலகுக்குநாதமுதல்வனேபோற்றியிந்த
மூன்றுலகுருவாய்நின்றமுன்னவாபோற்றிஞானந்
தோன்றியவடிவாபோற்றிசுயம்பிரகாசாபோற்றி
யூன்றுவிகாரமில்லாவொருவனேபோற்றிபோற்றி. (௮௨

யென்றுபல்துதிகள்செய்தேயின்பவாரிதியிலாழ்ந்து
நின்றுமெய்மறந்துபோற்றுநிலைமைகண்டெழுந்துவெய்தின்

சென்றகத்தியருமாங்கத்திரிமுனிவரனைக்கண்டே
யொன்றியகருத்தாலுள்ளமுவந்துபூசனைகள்செய்தார். (அங)

இருக்கருற்றவிசுமீய்ந்தாண்டிருத்தியேயினிமையாக
வருக்கியமுதவிப்பாத்தியமளித்தாசமனமுநல்கி
மருக்கமழ்புட்பஜாதிவகைகளாலருச்சித்தேத்தித்
திருக்களாவுடையார்சன்னிதானத்திற்சிறிதுபோது. (அச)

இருவருமிருந்துநீங்காவின்பத்தையடைந்துதத்தம்
பரிவினல்விடைவினுவாய்ப்பாவவினுசவீசர்
திருநகர்க்கதைகள்யாவுஞ்செவிப்புலன்குளிரக்கேட்டுப்
பொருவரும்பெருமையோர்கள்புசித்தவணமர்ந்தகாலை. (அரு)

அத்திரிமுனிவர்தாமுமாச்சிரமத்திற்கேகும்
புத்தியராகித்தெய்வப்பொதியமாமுனிவன்றனைத்
துத்தியமாகப்பேசிவிடைகொண்டுசுருதிபோற்றும்
நித்தியமுக்களாவினிமலரைத்தொழுதுபோற்றி. (அசு)

சீடரோடெழுந்துபோந்துதிரிகூடவரையைச்சார்ந்து
நீடருங்காலம்வைகிநிலைமையாய்வசித்தாரென்று
நாடருந்தவத்தின்மிக்கநயிமசாரணியந்தன்னிற்
கூடியமுனிவர்க்கெல்லாஞ்சூதனுங்கூறலுற்றான். (அஎ)

அந்நிலையுடையாரானவத்திரிமுனிவர்காணப்
பன்னகாபரணன்முக்கட்பரமனுஞ்சயிலநாதன்
முன்னுறவெழுந்தேயந்தமுனிவனுக்கனுக்கிரகித்த
தின்னமோர்கதையுண்டென்றேமுனிவரர்க்கிசைப்பதானான் (அஅ)

2-வது தீர்த்தமகிமைச்சருக்கம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தங்கள் உ௱௩௰அ

மூன்றாவது

# அத்திரிமாமுனி சுயம்புலிங்கதரிசனச் சருக்கம்.

கலித்துறை.

மெய்த்தவமாமுனிவரரேயத்திரிமாமுனியான் மவிசாரம்பண்ணி, யத்திரிகூடத்தினிலேயமர்ந்துவசித்திருந்திடுநாளவருக்காங்கே, சித்தநிலைகலங்கிடவோர்சஞ்சலமுமஞ்சனமுஞ்சிறிதுதோன்ற, வெய்த்துநெடுநாட்டவிசின்மனஞ்செலுத்திவிணிலுளைந்திருந்தோமென்றும். (௧)

பயந்தருநற்றவஞ்செனவேபதிந்துமனமதிற்செலுத்திப்பழக்கிஞேமோர், சுயம்புலிங்கதெரிசனமுமில்லாதுநெடுங்காலந்துலைந்தமென்றும், வியந்துவினையாதிகளிலழுந்துயிர்கள்கடைத்தேற வேண்டியன்றோ, வயன்றிருமாற்கரியபிரான்சுயம்புகளின்மூர்த்திகரயாகித்தோன்றும். (௨)

அப்பொருளின்பெருமைகளையறிவரிதுசுரபியுடலனைத்தும் வியாபித், தொப்பரியபான்முலையிலுதிப்பதுபோலுலகுவியாபகமாய்நின்ற, மெய்ப்பொருடான்சுயம்புகளில்வசித்திருப்பதாச்சரியம்விளம்புங்காலைச், செப்பரியமலையவரைக்குறுமுனிவரரியதவஞ்செய்ததாலே. (௩)

எக்காலும்பாவவினைச்சுயம்பின்வசித்திருக்குமிறைவராயு
மிக்கானதிருமணக்கோலத்துடனேகூடியநல்விமலராயு
மைக்கோதையிமயமலைமகளுமைபார்ப்பதிதணவாவரதராயு
மக்காரம்புனைபவரைமுக்காலந்தினஞ்சேவித்திருந்தாரென்றும்()

மிகவுமனக்கவலையுடன்முனிவரருஞ்சலித்திருக்கும்வேளைதன்னி, லகல்விசும்பிலொருவாக்குண்டாகியதுவாரீமத்திரியோநாமிந், நகமதிலஞ்திசிவசயிலரெனவசித்திருப்பதெந்தநாளும், புகலரியசுயம்புலிங்கந்தனின்மூர்த்திகரமாகப்பொலிந்தேநமென்றே

திருவாக்கின் றிரங்கேட்டேயத்திரிமாமுனிவரதிசயித்தாரிப்பாற், கருவாக்கும்பிறப்பிறப்பைக்கடந்திடுகோரட்சகரக்காலந் தன்னில், மருவாக்குமலர்சமித்துத்தருப்பைகளுங்கடனேமாநதிக்குத்தென்பாற், றருவாக்கும்வனத்திடையாச்சிரமகுணபால்விரைவிற்றனித்துச்சென்றார். (சு)

அவ்வனத்திற்கடம்புபலாத்தென்னைவெள்ளிலாத்திதமரத்தருகஞ், செவ்விதிகழ்கமுகிருப்பைமாதுளங்கமெலுமிச்சைசிறந்தவில்வ, மிவ்வகையார்தருக்கணிறைதண்கடனேத்தென்கரையிலினிமையான, திவ்வியமாங்கனிகளுக்காச்சென்றளவிலிங்கமொன்றுசிறப்பக்கண்டார். (எ)

தருக்களினூற்றிரையுமறைத்திருப்பவாதிசிவசயிலராயுமருட்பொலியுஞ் சுயம்புலிங்கராகியுங்கோமளமாயுமங்கேதோன்றி, யிருப்பவரைக்கண்டுதெரிசித்துடம்புமிகப்பூரித்திடவேபோந்து, குருப்புனிதராகியவத்திரிமுனிக்குவகையாகக்கூறினரால்.

சீடன்மொழிதனைக்கேட்டுமுனிவரதிசயித்துமனஞ்செல்லமுன்னே, காடுகளிலுள்ளபலகண்டகங்கள்தனைபோரார்கடிதிற்சென்றே, தேடரியமெய்ப்பொருளைச்சிவசயிலச்சிவக்கொழுந்தைத்திருமால்வேத, னுடரியவொருமுதலைச்சிவலிங்கவடிவாகநயந்துகண்டார். (கூ)

கண்டளவிலின்பவெள்ளக்கடல்பெருகிவழிந்திடவக்கடலின்மூழ்கி, விண்டவுரைகுழறிமயிர்சிலிர்ப்பவுடல்கம்பிதமாய்விழிநீர்சோரக், கொண்டபொறியைந்துகளுங்கட்பொறியின்வழிநிற்கக்கரங்கள்கூப்பி, மண்டியெழும்பரவசத்தாலெடுநேரமுனிவர்தமைமறந்துநின்றார். (ώ)

நின்றுபரவசனீங்கிக்கண்களினூற்சிவக்குறியைநேரேநோக்கி, யொன்றுகருத்தினராஞர்பரமசிவன்புயநான்குமுரகப்பூணுமென்றளிர்ப்பொற்கரமபயவரதமழுத்திரிசூலம்விளங்கவெள்ளிக்குன்றனையவிடைமீதிலுமையுடனேமுனிவர்முனங்குறுகிநின்றார்

தேவாதிதேவருமாய்ப்பார்ப்பதிசமேதருமாய்செனனமாய்த லோவாதபிணிக்குமருந்தினராய்ச்செங்கதிர்கோடியுதித்தமேனி யாவாராய்ச் சந்திரசடாதரராயிருநாடர்க்கண்ணதன்மேற்செந்தீக் கோவாருநுதலினராய்ச்செப்பொனிறச்சடையுவலிக்குழகராயு

அம்மவுலிமீதிலரதனமவுலியலங்கரித்தவறகராயுஞ்
செம்மைதருநீலமணிகண்டருமாயுயர்திருமேனியினராயும்
வெம்மைதருபுண்டரிகத்தோளுடையராகிநின்றமெய்மைகண்டே
தம்மனதுபரவசமாயடியிலழுந்தருவினைப்போற்றரையில்வீழ்ந்தே

பரவசத்தையடைந்திடுமைம்பொறிகளுடனமக்கரித்துப்பார்த்துப்பார்த்தே, கரமெடுத்தஞ்சலிகூப்பிபடிக்கடிவீழ்ந்தெழுந்து புனற்கண்கள்சோரப், புரமெரித்தபரம்பொருளையுயிர்ப்பூதமனைத்தினுக்கும்புகலதாஞ்சங், கரனைமிகுபத்தியுடன்வெகுவிதமாய்த்தோத்திரங்கள்கழறலுற்றார். (மச)

கங்காதராகருடகேதனனுமரிபரவுங்கருணாபாளா
யிங்காழவுலகனைத்துமிசைக்கானமெடுத்தேற்றுமிறைவாதேவா
மங்காததவமுனிவர்நீங்காதுதெரிசனைசெய்வடிவாவேழை
பங்காளாகுமரர்திருவுளமகிழக்கிருபைசெயும்பரமபாதா. (மரு

சேசபிலப்பருப்பதத்தினடியிலெழுந்தருளிவளர்செல்வாகாந்தி
வீசுகயிலாயவெற்பில்வினையாடியினிதிருக்கும்விமலாவென்றுந்
தேசுதிகழருபத்துநாலுகலைகளும்நிறைந்ததேவேயன்பா
னேசமலைமகள்பாகம்பிரியாததனிமுதலேலிங்கரில்வாழ்வே. (மச

கோலவடிவெடுத்துமுன்னாண்முரனெனும்வல்லசுரனைட கொன்றதுங்க, மாலவனுமலரவனுந்தேடநின்றபெருங்கருணை லையேசெம்பொன், மேனுலகமாள்பவனைவிருத்திராசுரன்பல யாம்வேந்தன்போற்றும், வாலைமதிச்சடைமுடித்தோயதிவிட தியாகியமங்களங்களுள்ளோய். (ம

அறவடிவாய்க்குணங்கள்குற்றமில்லாதமெய்ப்பொருளா ள்மெஞ்ஞான, முறுமுருவாய்ச்சகளருமாய்நிட்களமாயவ்விர முடையராகிச், சருவசெகதீசுரராயுயிர்களுக்குக்கர்மபலந்தர ராகி, நிறைதருமாகமங்களினாற்பூசிக்கும்பெருங்கருணைநிக வாழ்வே. (

சருவசங்கர்ரருமாயுயிர்களுக்குநோவகற்றுந்தமரோக முறுபணிசெய்துமைப்போற்றுமடியவருக் குயிர்த்துணை ன்னைநெஞ்சிற், பெறுமவர்கள்பயமொழிக்கும்பேரொளி

னைத்தியானம்பிரியாதார்கு, மறுவில்சுகரூபியுமாயிருந்துதிரு
வருள்வழங்குமகிமையோனே. (௰௯)

காந்திதருமகுடமத்தகடகமுதலுடையவராய்க்கருதுமேவார்
க்கும், போந்தபயப்பிறதானமளிப்பவராயுயிர்களுக்கம்போக்கு
வாரா, யேய்ந்தவுருவுள்ளவராயில்லாரய்மாதவனுக்கின்பராகி,
வாய்ந்தமனுகுலராமன் பூசிக்குஞ்சிவசயிலவாழ்வினரே. (உ௰)

சிற்பராரய்ப்பிரபஞ்சந்திரிப்பவராய்த்திரிகாலந்தன்னிலேயு
முற்பனமாயுள்ளவராயெக்காலுமுலகுதொழுமொருவராகிச்
சற்பசிரேட்டங்களையும்பூடணமாயுடையவராய்ச்சம்புவாகி
நிற்பவராய்ச்சந்திரசூரியர்வயங்குமவுலியராய்நிருத்தராயும். (உக)

ஆசைமுதலாகியதோடங்களில்லாதவராயுமனாதியாகிப்
பாசவினைகளைந்திடுபராபரமாய்க்கலிகாலப்பாவம்போக்கு
மீசருமாய்க்காலாகாலச்சொரூபராயடியாரீட்டும்பாவ
நாசமுறச்செய்பவராய்க்காலபரிபாகமிலாநாதராயும். (உஉ)

மேருவில்லராய்மறையோர்வேள்வியினாற்பூசிக்கும்விமலரா
கிப், பாரினுள்ளோர்முனிவரிமையோர்வணங்குங்களினமலர்ப்ப
தத்தராயும், நாரியிடம்பிரியாதசெயதேவமாதேவநம்பனான,
வாரியமுதேசகலதேவதைக்குமதிபதியாய்வந்தவாழ்வே. (உ௩)

காரணராய்நித்தியராய்விருப்புவெறுப்பிலராய்க்காமேசராகி
யாரணராயாரணத்தினுட்பொருளாயதிலொளியாயகிலம்யாவும்
பூரணமாய்நிறைந்தவராயாதாரமில்லவராய்ப்புனிதராகி
வாரணத்துவுரிபோர்த்துச்சிவசயிலபதியாகவந்தவாழ்வே. (உ௪)

ஆனந்தரூபருமாய்மாயைகளைக்கடந்தவராயமரர்யாருங்
கானங்கொண்டேற்றுகருணைக்கடலாயன்பர்மனக்கவலைமாற்றி
யீனந்தங்கியபிறப்போடிறப்பானகடலகற்றியிடுவராகி
வானந்தமாகிநடுவிறந்தபொருளேயெனவும்வணக்கஞ்செய்தார். (

(வேறு)

கமலாசனனைப்படைப்பாய்சரணங்கரியோனெனவேபுரப்
பாய்சரண், மமலாவதுசங்கரிப்பாய்சரணமழிவேயழிவின்றெளி

வேசரணம், விமலாசரணம்நிலநீர்கனல்கால்வெளியாகியவாசர
ணஞ்சரண, மிமவான்மகளுபகனே சரணமெனையாளிறைவாசர
ணஞ்சரணம். (௨௬)

மணியேமணியிலொளியேசரணமலரேமலரின்மருவேசரண
மணியேயணியினழகேசரணமமுதேயமுதின்றெளிவேசரணம்,
பணிவார்பிணிகொன்றிடுவாய்சரணம்பசுபாசமலங்களைவாய்சர
ணந், தணியாவெளியானவனே சரணஞ்சயிலாதிபனே சரணஞ்
சரணம். (௨௭)

(வேறு)

கலித்துறை.

ஒன்றுயிர்சுடரிரண்டுபூதங்களோரைந்தாய்
நின்றநாதனை விளக்கிருக்கவுங்கனல்தேடிச்
சென்றவாருமாய்ப்பாற்கடல்மீனுமச்சீர
மன்றியோர்பொசிப்பினுக்கலைவதுமாயலைந்தேன். (௨௮)

அய்யனே பிறப்பிறப்பெனுங்கடலையான கலச்
செய்யவேண்டுமோ நான் கடனுனதுசேவடிகள்
கைகளாற்றொழுதேற்றுவதென் கடன் கண்டா
யுய்யுமாறெனக்கருள்புரிந்திரங்கிடாயுரவோய் (௨௯)

என்றுபோற்றியத்திரிமுனியிருந்தனனிப்பாற்
குன்றவார்சிலைக்குழகனுமவர்க்கருள்கூர்ந்தே
நன்றதாம்வரமுதவினநவிலுவோமென்று
துன்றுமாதவச்சூதனுஞ்சொலத்தொடங்கினனால். (௩௰)

அத்திரிமாமுனிசுயம்புலிங்கதரினச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தங்கள் ௨௱௬௮.

நாலாவது

# அத்திரிமுனிக்கனுக்கிரகமானசருக்கம்.

கலித்துறை.

முடிவின்மாதவமுனிவிர்காளத்திரிமுனிவர்
படியின்மீதினிற்பலமுறைதுதிசெய்துபதும
வடிதொழுதிடுமவர்க்கருள்புரிகுவதாகப்
பொடியணிதிருமேனியனொருமொழிபுகலும். (க)

உத்தமதவனத்திரிமுனிவனையொருங்கே
யத்தனுந்திருநோக்கருள்செய்துநல்லறமும்
பத்தியுமிலார்தமக்குநாம்வெளிப்படோமுனக்கு
நித்தியங்கலியாணமாய்மனதினின்றிடவே. (உ)

வேண்டுநல்வரங்கேளெனவியலனும்விளம்ப
வாண்டநாதனேயகிலமாயதிருளவுயிராய்
நீண்டமாலயற்கரியதாயென்றுநித்தியமாய்ப்
பூண்டவன்பினர்க்கருள்செயும்புண்ணியப்பொருளே. (௩)

என்றுமியான்றெரிசித்திடவீண்டிந்தவடிவாய்
நின்றுயிர்க்கெலாம்புத்தியுமுத்தியுநிகழ
நன்றதாகியவாகுதிதானநற்செபமு
மொன்றுபற்பலகோடியதாகவுமுதவி. (௪)

கோதிலாத்திரிகூடமால்வரையின்றுமுதலா
யாதியாஞ்சிவசயிலமென்றகிலமும்வியந்தே
யோதிடும்படிசெய்தெனக்குனதுசேவடியிற்
பேதியாதபேரன்புநற்பத்தியும்பெற்றே. (௫)

மற்றொருவிடையங்களின்மனதுசெல்லாமற்
பெற்றிடும்படிக்கருள்செய்தேயெனைத்தினம்பிரியாச்
சுற்றமாகியசீடனுநாடொறுந்தொழுதே
யுற்றசேவைசெய்திடவருள்புரிந்திடாயரவோய். (௬)

என்னமாமுனிவரனடியிணைபணிந்திசைக்க
முன்னவன்றிருவாய்மலர்ந்தொருமொழிவிளம்பு

மன்னுமாமறைமுனிவரீர்கேட்டநல்வரங்க
டனைநல்கினேனும்ப்ரகசியமொன்றுசாற்றுவமால். (௭)

இத்தலமுதற்றானமாயினிதமாந்துறைமேவ
மத்திரிமுனிவரநமக்கற்புதமான
வுத்தமதலமினமிரண்டுள்ளதென்றுவப்பாய்
சித்தனுந்திருவாய்மலர்ந்தருளுடனிகழ்த்தும். (௮)

ஈதலாற்றுவத்தலநமக்குளதருதிசைப்பேறு
சீதநீர்க்கடலையின்கரைப்பசிமத்திலே
போதன்மாலமராதிபர்பொருந்தியதான
மேதநீக்கும்வாலீசுரந்தனிலுமியாமிருப்பேம். (௯)

பொன்னகர்க்கிறையாகியமகபதிபுதல்வ
னன்னவன்கவியிந்திரன்வாலியென்பவன்றன்
பின்னவன்சுக்கிரீபன்வெய்யோன்மகன்பிலவான்
றன்னுடனமர்புரிந்தனனெடிதுநாள்சலித்தே. (௰)

வாலியென்பவனத்தலந்தன்னில்வந்தணைந்தே
சீலமார்புனற்கடலையிலாடியேதினமுங்
காலமூன்றெனமைப்பூசனைபுரிந்துளக்கனிவாற்
சாலவுந்நெடுநாட்புரிந்தானருந்தவமே. (௰௧)

பொருந்துமன்பினொற்பூசனைபுரிந்திடலானுந்
திருந்துமாதவமநெடிதுநாட்செய்திடலானும்
பெருந்தவத்தவாவெதிர்ந்தவர்பெலன்படுபோதி
யருந்தவம்புரிவாலிபெற்றிடவரமளித்தேம். (௰௨)

மேலைநாளெமைவாலியும்விரும்புபூசனைபால்
வாலிநாதரென்றவண்சுயம்புலிங்கத்திலெப்ப
தானும்போகமுமுத்தியுமளிக்குமத்தலத்தின்
மூலமார்தெரிந்துரைக்கவல்லாமறைமுனிவே. (௰௩)

உத்தமத்தினுக்குத்தமமாகயாமுறையு
மத்தலத்தின்றென்புலத்தினிற்சுதலமாக
முத்தமிழ்வரைக்குருத்தரகுலாதிசைமுழங்கித்
தத்துதண்புனற்கடலையின்றென்கரைதனிலே. (௰௪)

தென்கயிலையாம்விதிகிரேதாயுகத்தினிலே
யன்புடனெமைப்பூசனைபுரிந்தனனன்றிப்
பின்யுகந்தொறுமுகந்தொறுமெண்ணிலாப்பிரம
ரின்புறவும்பூசித்தனர்மகத்துவமெளிதோ. (௰௫)

கருமமோடத்தங்காமமுத்தியுந்தருகின்ற
பிரமதேயமதென்றுமூவுலகமும்பேசு
மருமைமாதவனுமேராமராங்குபூசித்தே
பெருமையாமிந்நியதத்துவநாந்தாப்பெற்றான். (௰௬)

தேவர்தானவர்சித்தர்வித்தியாதரர்திருமால்
பாவிரிஞ்சனேமுதலுளோர்கயிலைமாலவரையின்
மேவியாங்குளமலர்கொடுபோந்துநல்விதியாற்
பூவுலகிலத்தலத்தெமைப்பூசனைபுரிந்தார். (௰௭)

ஆகையாற்கயிலாயமென்றகிலமும்புகலப்
பூகவெலிசூழ்பிரமதேயத்திலெப்பொழுது
மாகவானவர்புவியுளோராதிதம்வணங்கிடவே
யோகையாயுமையவளொடுமாநதினிதுறைவேம். (௰௮)

மருப்பதுமத்தில்வளரயன்கடனைவாருணையா
யிருப்பதாயதிற்றீர்த்தனுசிரார்த்தம்யாகமுமே
விருப்பினாற்செய்வோர்க்கொன்றுநூறாய்விளைந்திடவு
மருப்பிலன்னதியாடியேநமையநுதினமும். (௰௯)

சேவைசெய்திடுமவர்க்கேமக்கொட்டிதீவினைகள்
பாவநோய்மனப்பீடையேமுதற்பருவரற்கண்
மேவிடாதநல்வரங்களுமத்தலமேவு
மியாவருஞ்செல்வநல்லறமும்பெற்றிருந்திடவும். (௨௰)

மிக்கதாம்வரம்வேண்டினன்சதுமுகன்விருப்பி
யக்கணமவன்கேட்டநல்வரங்களுமளித்தே
மிக்கடனையாங்கங்கையுருசிபிதுலோயினிற்
புக்குமத்தலமகத்துவம்புகல்வதற்கெளிதோ. (௨௧)

இந்தமூன்றுதானமுநமக்கினிமையாகையினாற்
சிந்தைசெய்துவந்தனுதினஞ்சேவைசெய்திடுவோர்

பந்தவல்வினைநீங்கிமேயபாகதிபடைவா
ரெந்தமக்குநீவிருப்பொடுமனைவிநவியைந்தே. (உஉ)

உரைத்தசோத்திரநமக்குவப்பாயிருப்பதனாற்
றரைக்குள்யாவரும்பத்தியினாற்சதகாலுந்
திருத்திராம்பெறப்புகன் றுநஞ்சேவைசெய்திடுவோர்க்
கருத்தியோடுமன்னேரிடத்தனுதினமிருப்போம். (உங)

அருமையாகநாம்பிரசன்னமானகாலத்திற்
பெருமையாம்பொருளவாகள்பெறுதனுமுளதோ
வரிமையாய்த்தினமுன்றுகாலமுமுரைப்பவர்க்குத்
தருமமோடத்தகாமமுமுத்தியுந்தருவோம். (உச)

சத்தியமிதுயாவராயினுமிந்தத்தலத்தி
லுத்தமங்களாம்புண்ணியகாலத்திலுவப்பாய்
நித்தமாகியதீர்த்தநீராடியுநெகிழ்ந்த
பத்தியாகவுபிண்டப்பிரதானமும்பண்ணி. (உரு)

தேவர்களுடன்முனிவரர்பிதிர்க்களுந்திருத்தி
யாவதாய்த்தருப்பணிந்திடுமவரிருவழியின்
மேவியபிதிர்க்களும்பதமடைகுவாமெய்யே
கூவின்மிக்கதாம்பஞ்சக்குரோசமத்தியிலே. (உசு)

செய்யுமோமங்கடானங்கள்செபங்களுநமது
மெய்யருளினாலொன்றுகோடியினிலுமிகுமா
லையமில்லைநஞ்சிவலிங்கந்தனிலியாவருக்கு
முய்யுநன்னெறிகாட்டிபங்கினிதமர்ந்துறைவோம். (உஎ)

அன்றியுங்கலிகாலத்திலந்தவடிவாய்
நின்றிடுவதாமாகையாலீயுமன்னிலையை
பொன்றியோகனைத்தினந்திரிகாலமுமுவப்பாய்
நன்றதாகியபூசனைபுரியெனநவின்றான். (உஅ)

இப்படிச்சயிலேசருமத்திரிக்கியமபி
யொப்பிலாத்தலத்தமாந்தினிதிருந்தனனுமையா
ளெப்புவனமுமீன்றருள்பரமகலியாணி
யப்புவேணியர்பாங்காதெக்கணத்தினிலமர்ந்தாள். (உகூ)

நந்தியாதியாங்கணங்களுமாலுநான்முகனுந்
தந்திமாமுகனறுமுகன்சத்தமாதாக்க
ளுந்துவெள்விடைத்தேவர்தண்டீசர்விண்ணுலகா
ளிந்திரன்முதற்றேவர்கணடனவேந்திழையார். (௩௰)

பருதிமாமதிதிக்குளபாலாகநதருவா
பிருகுவேதவியாசராம்பிரமமாமுனிவ
ரருமைநாரதன்முதலுளவமரர்மாமுனிவர்
மருவியங்கமர்ந்தவரவர்தானத்தில்வைகி. (௩௧)

இருப்பதாகவேசிவசயிலேசருமிருந்தார்
விருப்பமாகவேயத்திரிமுனிவிசுவசத்தா
லருப்புமன்பினால்விசுவகன்மாவையங்கழைத்தே
திருப்பணியிமையோர்பிருமாணமாய்ச்செய்தான். (௩௨)

ஆலயம்பிரகாரம்விமானங்களனைத்து
நாலுவாயிலுமிமைத்துநற்றேவர்யாவருக்குஞ்
சாலவவ்வவர்தானங்கடனையுஞ்செய்தைந்து
காலமத்திரிமாமுனிகடனையிலாடி. (௨௩)

சயிலநாதனையிமையவர்தலைவனைத்தனியைக்
கயிலையாளனைப்பரமகல்யாணியாங்கருணை
யயிலைமேவியகுழகனைப்பூசித்துமகிழ்ந்தே
யுயர்வதாங்கிருத்தியமனோசித்தியுமுடைத்தாய். (௩௪)

இருந்தனரெனச்சூதமாமுனிவனங்கிருந்த
வருந்தவச்சவுனகர்முதலாதியோர்க்கறைந்தான்
றிருந்துமாதவர்செவிப்புலன்றெவிட்டிடப்புகன்ற
பொருந்துசூதனைநோக்கியேபுகலுவதானார். (௩௫)

நாலாவது அத்திரிமாமுனிக்கனுக்கிரகமான சருக்கம் முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ௩௱௩.

அஞ்சாவது

# பிரமதேவர்பூசித்தசருக்கம்.

கலித்துறை.

மன்னுமாமறைமுனிவரர்கேட்டுளமகிழ்ந்தோந்
தொன்னெறியுணர்சூதமாமுனிவதொல்லுலகிற்
றன்னிகர்சிவசயிலமுஞ்சிவதலங்களுக்குண்
முன்னமாகுமனாதியென்றருளொடுமொழிந்தாய். (௧)

ஆர்பொருட்டிலனாதியதானதத்தலமும்
பாரிடத்திலெவ்வுலகத்திலுயிரெலாம்பரவ
யோர்தருஞ்சிவலிங்கரூபத்துடனிருந்தார்
போரரவபூடணனையார்கண்டுபூசித்தார். (௨)

அத்தலமகிமையிற்றிலமளவுஞ்சோர்வன்றிச்
சத்தியங்களாற்புகலெனமுனிவரர்சாற்ற
வுத்தமகுணமுடைச்சூதனுமனமுவந்தே
புத்தியாலுணர்ந்தருந்தவமுனிவர்க்குப்புகல்வான். (௩)

வாருநன்னெறிமுனிவிர்காள்நீவிர்வையகத்தி
லேருலாவியமுனிவர்கள்சிரேட்டராயிருந்து
நீருலாஞ்சடைநிமலனுக்கன்பராய்நிதமுஞ்
சோர்விலாதடிக்கடிசிவகதைகளைச்சொல்ல. (௪)

உமதுபேரன்பாலதுபுதிதாகநீருவந்தே
யெமைவினாவியேகேட்பதினாலுமக்கிசைப்பே
மமைவிலாதகற்பாதியிற்சற்குணரான
கமலநான்முகன்செகமெலாம்படைத்திடக்கருத. (௫)

மதிமயங்கியேசிருட்டியின்றொழிலெலாமறந்தே
யதிகிலேசராயசத்தராயிருக்குமவ்வளவின்
முதியதாகவோரறிவவர்மனதினில்முன்னிப்
பதியதாஞ்சிவனேவலாலுலகெலாம்படைத்தோம். (௬)

அச்சிவன்செயலிப்படிச்செய்குவதானு
லெச்செயல்பிறிதுள்ளதோசிவன்செயலின்றி
நிச்சயமிதுவெனவவர்மனநினினைந்தே
மெச்சமாமறைவேதனுந்துயருறும்வேலை. (எ)

மாகமீதசரீரிவாக்கானதுவெழுங்குங்
கோகனகமேவியமறையவர்மனங்குளிர
வாகநீவருந்துவதென்கொல்சிருட்டிநீரடைந்தே
யோகையாம்படிகேளுமென்றருளுடனுரைக்கும். (அ)

தெக்கணச்சமுத்திரக்கரையதனிற்றென்மலைய
மிக்கதாமதற்குத்தாமுலகெலாம்வியப்ப
முக்கணாயகராகநாம்வான்முகடுருவத்
தக்கதாஞ்சிவசயிலமென்றொருதடவரையே. (௯)

அத்தடவரைக்குணதிசைவிரைவினீரடைநது
சித்தமும்பொறிநெறியினிற்செலுத்திவிடாமன்
மெய்த்தவம்புரிகுதிரவண்மேதினியதனி
லுத்தமங்களாம்புண்ணியச்சேத்திரமுமக்கு. (௰)

ஆங்கிலிங்கசொரூபியாய்த்தோன்றிநாமகிலம்
பாங்குடன்சிருட்டித்திடும்வகையெலாம்பகர்வோம்
நீங்கியவ்வயின்செல்லெனநிகழ்ந்திடக்கேட்டே
யோங்குமாமறைக்கிழவனுமதிசயித்துவந்தே. (௰௧)

அலமொழிந்தகமகிழ்ந்தமராதிபர்க்கெல்லாந்
தலைவனாகியநான்முகனசடுதியிலெழுந்து
நிலவுலாவியசிவசயிலத்துநேர்குணக்காய்
மலையமால்வரைக்குத்தரவிரைவில்வந்தடைந்தே. (௰௨)

பொறிகளொன்றதாய்மனநிலைகூடிடப்பொருந்தி
யறிவுமேற்கொளரேசகருப்பகமடக்கி
நெறியினூடுசுழிமுனையினேர்நிறுத்தியைந்தெழுத்து
முறுதியாய்த்தியானித்துளபுலன்களையொடுக்கி. (௰௩)

அரியவாகியதவசினைப்பிரமனுமவற்றுட்
புரியுநாளையிற்புகலருங்கருணையங்கடலாய்த்

தெரியவேசுயம்புலிங்கத்திற்றெரிசனைகொடுத்தான்
கரியமாயனுக்கடியினைகாட்டிடாக்கடவுள். (௰௪)

அண்ணறேன்றிடமலரயன்பரவசமாகி
யுண்ணிலாவியபெருங்களிப்பலைபெடுத்துவட்டக்
கண்ணிலானந்தப்புனல்சொரிந்திடக்கரங்குவித்தே
மண்ணில்வீழ்ந்துதோத்திரங்கள்செய்தான்சதுர்வாயால். (௰௫)

(வேறு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உமையொருபாகாபோற்றியுலகெலாம்வியப்பநிற்கு
மமைவிலாவடிவாபோற்றியாத்துமரூபாபோற்றி
யிமையவர்தலைவாபோற்றியிறைவனேபோற்றிசைவ
சமையநாயகனேபோற்றிசங்கராபோற்றிபோற்றி. (௰௬)

குணங்களான்மறைக்கப்பட்டமகிமைசேர்குழகாபோற்றி
யணங்கரவசைத்தோய்மாயையன்றியவுருவாபோற்றி
யிணங்கியவுலகுக்கெல்லாமேலதாமிறைவாபோற்றி
மணங்கமழ்கடுக்கைதிங்கள்வனைந்தசெஞ்சடையாய்போற்றி

அனுவினுக்கணுவாபோற்றியதிகத்துக்கதிகாபோற்றி
புணர்விருஞ்சிவமென்றன்னுந்தியானத்தையுடையபேர்க்குத்
தணவிலாதிருக்குமந்தவனுபூதிதருவாய்போற்றி
திணையுளோர்க்கருளுமுக்கட்சிவசயிலேசாபோற்றி. (௰௭)

என்றுபல்துதிகள்செய்தேயிணையடிதொழுதுபோற்றி
நின்றநான்முகனைநோக்கிக்கருணையூர்நிரப்பிச்செம்பொற்
குன்றவார்சிலையெங்கோமான்கோதறுசிருட்டியாவு
மொன்றியவருளினாலேயவர்க்குபதேசஞ்செய்தார். (௰௮)

அரியநல்வரமும்பெற்றேயரனனுக்கிரகத்தாலே
புரியவாஞ்சிருட்டிதன்னாலுலகெலாம்படைத்தேயின்ப
மரியபேருவகையெய்திமனமகிழ்ந்தினிதுவைகிப்
புரிசடைமுடித்தஞானப்புனிதர்க்குமுமைக்கும்பாங்காய். (௨௰)

நீடுமாலயமுண்டாக்கிநிமலனைமறைகளாலுந்
தேடரும்பொருளைமுக்கட்சிவசயிலேசன்றன்னைச்
சோடசவுபசாரத்தாற்றொழுதுபூசனைகள்செய்தே
யேடலர்வாசங்காட்டியெழுந்திடும்வசந்தகாலம். (௨௧)

கூடுபங்குனிப்பின் ஞானிற்கொடிவிடையுயர்த்திவிண்ணோ
நாடருமுனிவர்மற்றநாட்டுளோரெவரும்போற்றத்
தேடரும்பொருளாமுக்கட்சிவசயிலேசற்கன்பாய்
மேடசங்கிராந்தித்தீர்த்தவிழாவினைநடத்தினனே. (உஉ)

உச்சவமந்தத்தீர்த்தமுவந்துநான்முகனுமாடி
யச்சிவசயிலநாதனடியிணைபூசித்தேத்தி
நிச்சயப்பொருளேமுக்கணிமலனேநகரிலாத
விச்சையாம்வடிவாநாயேன் விண்ணப்பமுளதாவென்று.(உங

துரையிடைபணிந்துபோற்றிச்சருவசங்காரவாதி
வரையிலென்பொருட்டாலிந்தவரைதனிலிங்கரூபா
யுரையுணர்விறந்தமுக்கணொருவனேதோனறிநாயேன்
றெரிவுறவுபதேசித்தசிருட்டிநான்பெற்றநாளும். (உச)

தவமிவணியற்றலாலுநதடவரைதனையனாதி
சிவசயிலமுமிதென்றேசிறந்தபேருடைத்தாயிந்தக்
குவலயந்தன்னில்யாருங்கூறிடவரமுமபெற்றே
யவனமர்சத்தியலோகமடைந்தனனுகையாலும். (உரு)

அவ்வரையடியிலீசனமர்ந்தினிதிருப்பதாலுந்
திவ்வியவரையனாதிசிவசயிலமுமதென்றே
யெவ்வுலகத்துளோருமெடுத்தியம்பிடுவர்மெய்மைத்
தெய்வமாதவரோயின்னஞ்செப்புவோங்கேண்மினென்றே. (

(வேறு)

கலித்துறை.

கோதிலரும்பொருளனைத்துங்குறைவின்றியிருக்குமந்தத்
திரிகூடத்தி, னாதியிலேயண்ணலெழுந்தருளியதாலாதிசிவசயிலமெ
ன்று, மோதிடுமிவ்வுலகனைத்துமெனச்சூதனுரைத்துமனதுவப்
பாலிந்தக், காதையைநீர்வினவியதான்முனிவரரேபுகன்றதெனை
க்கழறலுற்றான். (உஎ)

5-வது பிரமதேவாபூசித்தசருக்கமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் ௲௱௯௰.

## ஆறுவது

# பச்சிமமுகமானசருக்கம்.

கலித்துறை.

என்றுமுனிவரர்மகிழ்ச்சூதனிசைத்திடவுமன்னோரினிமை யாக, மினநிகழுஞ்சடைமுடியோய்மேதினியிலுள்ளசிவாலயங் கடன்னி, லொன்றுசிவக்குறிகள்முகங்குணதிசையாயிருப்பதுவு மூளதாமீதை, யன்றியுமச்சிவசயிலமனுகியதிற்சுயம்புலிங்கமா யுந்தானே. (க)

ஏதுகாரணங்களினாற்குடக்குமுகமாயிருப்பதிமையவெற்பு, மாதுகிலந்தனையீன்றவுமையவளுக்கேதுபுரிமகத்துவத்தா லோதிடவிவ்வுலகமெலாங்கலியாணியெனுநாமமுடையளானாள் வேதவியாசன்கருணைமிகுதியினாற்சிவபத்திமிகுந்தமேலோய். (உ)

சகலகலைக்கிருப்பிடமாய்த்தலக்கடலாய்முன்னாலகின்றன்மை யாவும், புகலவருமொருமுதலாய்ப்புண்ணியமாய்மலவிருளைப்போ க்குஞானப், பகலவனுமெங்கண்மனப்பசிக்கமுதைச்செவிக்கூட்டு ம்படிக்கென்றேயிவ், வகலிடத்திலவதரித்தருதவிந்தக்காதை யெங்கட்கறையவேண்டும். (ங)

என்னமுனிவரர்வேண்டிக்கேட்டகதையெடுத்தியம்பவிம லானீன்ற, வன்னையுமைபரமகலியாணிமணவாளர்தமையகத்தி லன்பா, யுன்னியவரருள்போற்றிச்சிறிதுபொழுதிருந்திதனையு ரைப்பேமென்றே, பன்னுமறையளவறிந்தவருந்தவச்சூதனுமெ டுத்துப்பகர்வதானான். (ச)

கருதரியதவமுனிவீர்சிவசயிலப்பதியிலொருகாலந்தன்னில், வரியுழுவையதழ்புனைந்தபரமசிவனட்டகுணவரையாயென்றும், ப ரிவுடையபார்ப்பதிசமேதருமாயிருப்பளவிற்பதுமச்செய்யாளர்மு தற்றேவர்கண்மகவானமரர்திசைப்பாலர்கதிரவர்கள்சோமன்.

அட்டவசுதேவதைகள்பதினொருவருருத்திரர்சித்தாதியோர் கள், மட்டளவிலாதவிஞ்சைக்கின்னரர்கந்தருவருடன்வசிட்டரா தி, யிட்டமுளபிரமமுனிவரரெவருநாரதரொடெண்ணிலாத, சிட்டரெனுந்தேவமுனிவரரெவருங்கங்கைமுதற்றீர்த்தமியாவும்,

மிக்கபிரணவத்தோடும்வேதங்களஞ்செழுத்தின்மேவிநிற்
கும், தக்கசத்தகோடிமகாமந்திரங்களத்திரியாநதவத்தின்மிக்
கோர், ரொக்குமறைபவர்முதலாயுள்ளோர்களெல்லோருமொரு
ங்கேகூடி, யக்கணிமேனியன்றனையேதெரிசனைசெய்துள்ளமகி
ழ்வடைந்துபோற்றி. (எ)

அகிலபுவனேசுரனுஞ்சிவசயிலபதியைமனதன்பினோடும்
வெகுவிதமாய்த்தோத்திரங்கள்செய்துபயபாரிசமுமேவிநின்றே
சகளவடிவாயுமையோடிருந்தலர்ந்தகமலமுகன்றன்னைநோக்கி
மகிழ்வுபெரிதாயிருந்தாரவ்வேளைபிருங்கிருடிவந்துதோன்றி. (அ)

கருத்துநனிவிருப்பினராய்ப்பரமசிவன்றிருமுன்புகளிப்பி
னோடும், நிருத்தமளித்தனர்சயிலபதிகருணைநிரப்பியிடநெடிது
போதங், கருத்தியுடன்பலதுதிசெய்திறைவர்திருவருளாலப்பி
கையைநீங்கித், தரித்தபுனற்சடைமுடியார்தன்னைவலஞ்சூழ்ந்த
டியிற்றாழ்ந்துநின்றார். (கூ)

மருங்கிருந்தவுமையவளுந்திருமனதுவெதும்பியிறைவதன
ம்நோக்கிப், பிருங்கிருடியெனைநீங்கியும்மைவலம்வந்ததென்னே
பேசீரென்றே, கருங்குவளைவிழிசிவப்பவிதழ்துடிப்பக்கேட்டள
விற்கருணைகூர்ந்தே, யரும்பியபுன்னகைபுரிந்துசயிலபதிமலைம
களுக்கருளிசெய்வார். (ய)

அண்ணலுமைதனைநோக்கியுன்னையுநம்மையுமுணர்வாலறிந்
தேபூசை, பண்ணினபோக்குன்னிடமாய்ப்பலன்பெறுவதில்லை
யெனப்பகர்தலோடு, மெண்ணரியசகலபுவனமுமுருவாய்நிறைந்த
தவளென்பதாலே, திண்ணமுடன்பிருங்கிருடியுடற்குருதிதசை
முதலாந்தேவிகூறாய். (ய)

உள்ளதெலாமுமைவாங்கப்பிருங்கிருடியசத்தனாயொடுங்கிநி
ன்றான், பிள்ளையளிதவழ்குழலிபச்சிமத்திற்சிவனைவிட்டுப்பிரிந்
துபோனாள், தெள்ளமுதேநற்குணங்களுடையவளேயெனக்கு
டக்கேதிரும்பிநோக்கி, வள்ளறிருவாய்மலர்ந்துகலியாணியிங்
கேநீவருவாயென்றார். (யஉ)

உன்னிடத்திற்பரியாசமுறாத்ததெனவுண்மையினைவுணர்கி
லாயே, யென்னவுநன்மொழிகள்பலவெடுத்திசைத்துங்கேளாம

லெழுந்தேயெய்தி, யன்னையுமையவள்பிரிந்தத்திரிமுனியாச்சிரமருடக்கதனிற்றேவ, கன்னியர்கள்புடைசூழநற்றவஞ்செய்தாளிமையக்கன்னிதானே. (௰௩)

அத்தவத்தினுலிறைறவர்திருமேனியதிற்பாகமடையவேண்டிச், சித்தமுடன்புலன்பொறிகளொன்றாகிச்சிவனடியேசிந்தித்தேத்தி, மொய்த்தசடைவிரித்துமரவுரியுடுத்துப்பொடிதரித்துமுகஞ்சேரக்கும், பத்தியுடனணிந்துமலர்ப்பாதங்கோலம்பமுமாய்ப்பரிவினேடும். (௰௪)

ஒருகரத்திற்சிவமணிதொட்டொருகரத்திலுருவையெண்ணியுவப்பதாய்மற், றிருகரமுந்திருமுடிமேலஞ்சலிசெய்தரியதவமியற்றுகின்ற, ளரியதவக்கவுதமரோடத்திரிமாமுனிமுதலோரடைந்தேனுனப், புரிகுழலாடன்னையன்னோர்விருப்பினேடும்பூசனைகள்புரிவதானுர். (௰௫)

இத்தகையவாய்நெடுநாளரியதவம்புரிந்திருந்தாளிறைவராங்கே, சித்தவிகாரத்தினெடும்பிரிந்திருக்குமுமையவளைச்சிந்தைசெய்தே, வித்தகமாங்கங்கைமுதறபெண்களைவிட்டழைத்துவரவேணுமென்றே, யத்தரவர்முகனேக்கிநன்மொழிகள்மிகுதிபலவருளிச்செய்தார். (௰௬)

கங்கையருண்மொழிகேட்டுக்கண்ணுதலேவலின்மிகவுங்கடிதுசென்றே, பொங்குநதிரூபமதாயண்ணறிருவுளம்விருப்பப்பொருட்டினுலே, யங்கடைந்தேயுமையவளுக்குணர்த்திநன்மொழிகள்பலவுரைந்தேதவின்பாற், றங்குதிருவுளத்தினராய்மேற்குமுகமாகநின்றூர்சயிலநாதர். (௰௭)

என்றுகங்கையுமையவளுக்கினியமொழிவேணதெலாமிசைத்துநின்ற, ளன்றுமுதற்சிவசயிலமேன்முகமாயிருப்பதுகல்யாணியென்றுங், குன்றவில்லியாரழைத்தபடியாற்கல்யாணியென்றுங்கூறும்வைய, மின்றவம்பார்ப்பதிபுரிந்தகாரணத்தாற்சீசயிலமென்பதாகும். (௰௮)

மேன்முகமாயிருப்பதுவுங்கலியாணியென்பதுமெவ்விதத்தாலென்றென், பால்வினவினீரதனைப்பகர்ந்தோமின்னமுங்கே

ட்கப்படுவதுண்டேற், சாலவுநாமொழிந்திடுவோமெனவுமருந்தவமுனிவர்தமக்குமுன்று, காலநிலைதனையுணர்ந்தரூதமுனியருளினெடுங்கழறலுற்றார். (௰௧)

6-வது பச்சிமமுகமான சருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ௩௱௬௧.

# ஏழாவது

# தேவியிடப்பாகம்பெற்றசருக்கம்.

கலித்துறை.

மன்னுமருந்தவமுனிவர்கூதமுனிமொழிகருணைவதனநோக்கி, யன்னையுமைபரமகலியாணிதவத்தாலிறையையடைந்தவாறும், பின்னுமவர்திருமேனிதன்னிலொருபாகமவள்பெற்றவாறும், பன்னுமறைமுனித்தலைவபுகலெனவக்கதையவர்க்குப்பகர்வதானார்.

அம்முனிவர்மனதுமகிழ்ந்ததிசயிப்பவகிலகாரணராய்நின்ற, வெம்மிறைவர்தேவியைவிட்டிருப்பதரிதென்றுதிருவுளத்திலுன்னி, மும்மையுமின்றலையலையமழக்குவரக்கங்கைதனைமுன்னேவிட்டுஞ், சம்மதியிலலாதவளையென்றுதிருவுளநினைந்துசயிலநாதர்.

அத்திரிமாமுனிமனதிற்பிரியாதகாதலனசூயையென்னும், பத்தினியைத்தருமசிந்தையுடையாளைப்பதிவிரதப்பண்பினளைச், சத்தியவாக்கினளையெழிற்றையலைமாதவக்கொழுந்தைச்சகரவேலைப், புத்தமுதமனையாளையண்ணறிருமுன்பழைத்துப்புகல்வதானார்.

(வேறு)

கலிவிருத்தம்.

இமவான்மகளாகியவேந்திழையா
ளுமையானவளம்முடனாடலுமா
யமையாமனவேகமுமாகியுமே
நமையேபிரிவாகினணன்னுதலே. (௪)

அரியாளுலகானதுயாவையும்பெற்
றுரியாணமையுமுடையாளுலகிற்
பெரியாணிதமும்பிரியாதவள்சொற்
பரியாசமதுந்தெரியாள்பகர்வோம். (௫)

அகல்வானவர்மாலயன்மாமுனிவோர்
மிகவாகியபேரவைநாமெதுவாய்ப்

பகர்வாய்மைமகளும்பதியாதுகுட
முகமாயவள்போயினதுமுறையோ. (௬)

கலியாணியெனுங்கனிவாகியபேர்
சொலிவாவெனலுந்துரிசாய்மனசஞ்
சலியாயரிதாந்தவசாலவண்மெய்
மெலிவாகியுமேவிடுவாளுமையே. (௭)

முதிராகாதலினுன்முனமேவருணை
நதியானவளைநனியேவினதுஞ்
சதியாமவள்சக்களவாய்மைகள்சம்
மதியாகவுமேவரலாகுவளோ. (௮)

அனசூயையெனுமமுதேநமது
மனமாயையினுன்மெலியாவகையுற்
பனவாய்மைமகணீபகர்வாயவளுக்
கெனவேண்டுவதுமருள்வோமினிதாய். (௯)

பகையாகியமன்மதபாணதுயர்
மிகவாகியதான்மெலிவாயினதுஞ்
சகமாயைகள்செய்தொழிற்றனிலதும்
புகல்வாயெனலுமவள்போயினளே. (௰)

கயிலாசபதிகனிவாய்மையினுன்.
மயிலாமனசூயையுநன்மகிழ்வாய்
வெயிலாதபன்மேவியநீள்குடுமிச்
சயிலாதியுமேவினள்தானுறையும். (௰௧)

இடமாகியவாச்சிரமம்மதனோர்
குடபாரிசமெய்குழைவாயிமவான்
மடமாமயினின்றிடுமாதவசி
னுடமேன்மையுமொண்ணுதல்கண்டனளே. (௰௨)

கண்டேமிகவுங்கருணையளாய்
வண்டார்குழல்மாமயிலாமுமையாள்
தண்டாமரையாகியதாளிணையில்
மண்டார்வமுழங்கவணங்கினளே. (௰௩)

இமவான்மகளைபெணையாள்பவளை
யுமையானவளையுலகீன்றவளை
யமையாவடிவானவளையிறைவர்
தமைமேவினளைச்சரணஞ்சரணம். (௰௪)

அயிலாதிபனுங்கணையேகடவிற்
றுயிலானவருக்கிளையாய்த்துகடீர்
கயிலாசமெனக்கருதிப்பதிசேர்
*சயிலாதிபனேசரணஞ்சரணம். (௰௫)

என்றேதுதிசெய்துபணிந்தெதிரே
நின்றேபணருளைபநிகழ்த்திடுவாள்
பின்றாழ்குழலாய்பிறைசேர்சடில
னின்றார்குடதிசையினிலோர்முகமாய். (௰௬)

கணைவேள்தொழில்காட்டவிருந்துமல
ரணைமேவிரைந்தியுநண்பகலுங்
குணவாரிதியாகியகொற்றவருன்
மணவாளரைநீயுமறந்தனையோ. (௰௭)

அருவாயுருவாயதுவில்லதுவாய்ப்
பெருமாயைகளுட்பிறவும்பலவா
மொருமாமுதலுந்தெளியிலலையெனி
லிருமாநிலமேலெளியாயினரே. (௰௮)

ஒருமாமுதலோருரவோருடைய
திருமாமனதுன்றிருமேனியிலே
யருமாமுதல்கலியாணியெனும்பெயர்
பெருமான்மொழியிற்பெருநெட்டுருவே. (௰௯)

அம்மாபிரிவாகியநாண்முதலா
யெம்மான்றொழிலேதுமிலாதவரா
யும்மான்மனதொன்றுமுணர்ந்திலருந்
தம்மாணைபுகன்றதுசத்தியமே. (௨௰)

என்றேபலவாகவியம்பிமனை
தொன்றாயிறையோனிடமுற்றடையச்

*சயிலாதிப + அனே.

சென்றேவருவீர் திருமுன்பெனவு
கன்றுமொழியொன் றுநவின்றனளால், (உக)

ஆராவமுதேயனசூயையெனுமா
பேரானவளேபெருமானருளாற
சீரார்திருமேனியிலோர்பாகந
தாராயெனிலென்றவசேபெரிதே. (உஉ)

சரதயமிகுதென்றனையேகருணை
வரதன்றிருமேனியிலோர்வடிவந
தரவின்மொழிதந்தருளுந்தனிமுட
விரதம்புரிவேனமிகின்றுமடியே (உங)

இறைவன்றிருமேனியிலோர்பாகம
பெறுமன்புடையேனபிறிதொன்றுமிலே
னறன்மென்குழலாயனசூயையெனக்
குறுபனடினேர்புரைபொன்றுளதால, (உச)

உனநாயகனத்திரிமாமுனியே
டென்னுவலைநீயிசைவாகவுமே
சொன்னவசொற்படியாந்தவசே
மின்னாரமுதேவிழைவாகுவனே. (உரு)

எனவேபுகலும்மளவிலெழிலார்
தனிமாதவர்கவுதமராதியாக
ணனிசூழ்வரவேநன்மாதவனு
மனசூயையுமனையடைந்தனனே, (உசு)

ஒருமாதவரத்திரிமாமுனிவோர்
மருமாமலர்பல்வகையாலுமையா
ளிருபாதமலர்தனிலேயினிதாய்த்
திரமாகியபூசைகள்செய்தனரே. (உஎ)

மண்மீதுபடிந்துவணங்கியிரு
கண்ணுலிகழுந்துமிகுந்ததுதி
பண்ணாமொழிந்துபணிந்திமவான்
பெண்ணாரமுதின்னருள்பெற்றனரே. (உஅ)

அக்காலனைசூலபாணியுமாதரவான்
மிக்காளுமையாண்பனவேட்கையெலாந்
தக்காரொடுசாற்றினளத்திரியா
முக்காலமுணர்ந்திடுமாமுனிவர். (உசு)

இன்பமொழிகேட்டிமயநகனிலே
தன்போதமுணர்ந்தவிசாரணையா
யன்போடொருகூர்த்தமிருந்தனைவர்
மின்போலொளிர்செஞ்சடைமெய்த்தவரே. (௩௰)

(வேறு) கலித்துறை.

பாதாரவிந்தமலர்பணிந்தெழுந்துபார்ப்பதியேபரையேயம் மா, வாதாரமாயிறைவர்திருமேனிதனிற்பாகமடையநல்குங், கேதாரவிரதமல்லால்வேறுமொருதவப்பேற்றாற் கிடைப்பதில்லைப், போதாருஞ்சடைமவுலிப்புண்ணியர்க்குவிருப்பமதைப்போற்றுவா யே. (௩௧)

மெய்த்தவரத்திரியிருகேவிளம்பமனமகிழ்ந்துதனவெற்பை த்தாங்கி, யெய்த்தவிடையுமையவணன்றென்றுமுனிவனைநோக் கியிமவானிருஞ், சித்தமகிழ்காதலனைமேனையனாருமையெனச் செப்பியந்த, வத்திரியைமன்னவியுடனன்னைபிதாமுறைமையளாய ருளிச்செய்தே. (௩௨)

இந்தவிரதந்தனையானனுட்டிக்கும்படிதெரிந்தேயெடுத்துச் சொல்வீ, ரந்தவகைப்படியானுமனுட்டிப்பேனென்றுமையாள ருளலோடும், புந்தியினுன்முனிபுணர்ந்தேபுரட்டாதிமாதத்தையினி ற்பொருந்துநாளா, யந்தமில்சுக்கிலபக்கத்தட்டமிதொட்டிருபத் தொன்றானநாளும். (௩௩)

அதிகபத்தியுடன்கூடக்கேதாரநாதனைமெய்யன்பினோடும், விதிமுறைபூசனைபுரிந்தேயிருபத்தோரிழைதுவரங்கரத்தில்வீ க்கி, மதிநுதலைபரமகலிபாணியமமாயிந்தவிரதமுறையாற்செய் தாற், கொதிமழுவாட்கையர்திருமேனியினிற்படிபாதிகொடுப்பா ரென்றே. (௩௪)

என்றுமுனிவரர்புகலப்பரமகலிபாணிமனைவியிளமையாக, வொ ன்றாகருத்தினளாகிக்கேதாரவீசுரனுக்குவப்பதாக, மன்றன்மல

ராற்பூசைபுரிந்தனள்கண்ணுதல்கருணைவடிவாய்வெள்ளிக், குன்றனையவிடையில்வந்துதேவர்கணம்புடைசூழக்குறுகினார். ௩௫

கோடிமதிப்பிரகாசங்குலவுதிருமேனியராய்க்கொன்றைவேணி, சூடியசந்திரகாந்திதுலங்கவொருகுழையில்வளைதுவளமற்ற, நீடியகாதினிற்றோடினின்றிலகநீலகண்டநிலவக்கையிற், கூடியமான்மழுத்திகழவபயவரதமுமிருகைகொடுத்துக்காட்ட. (௩௬)

பூசியவெண்பொடியொளிரவக்கரவப்பணிதிகழப்பொருவில்லாத, தேகதருமுச்சுடராந்திருநயனத்திருக்கணருள்திகழக்காட்டிக், காசில்வரிபுழுவையதளுடுத்ததின்மேற்பொங்கரவக்கச்சுவீக்கி, வாசமலர்த்திருப்பதத்தில்வனைந்திடுவீரக்கழல்கள்வயங்கித்தோன்ற. (௩௭)

கெந்தருவர்சித்தர்குண்டோதரன்வசுக்கள்கின்னரர்கிம்புருடர்விண்ணோர், நந்திமுதற்கணங்களுருத்திரர்கதிர்களாதரே முதலாயுள்ள, வந்தமின்யாதவர்தேவமுனிவரர்கள்புடைசூழவணைந்தேயாங்கு, மெந்தைசிவசயிலபதிகலியாணிதெரிசனைசெய்திடமுன்னின்றே. (௩௮)

மூன்றுலகுமீன்றவளைகலியாணியென்றவடன்முகத்தைநோக்கித், தோன்றியபேருவகையினாலவள்மனதுமகிழ்ந்துகளிதுளங்கவன்பாய், மான்றிகழுங்கரத்திறைவர்செய்யதிருவாய்மலர்ந்துவருந்திநீசெய், யூன்றியநற்றவத்தாலுங்கேதாரவிரதமகத்துவப்பதாலும். (௩௯)

நீமனதுமகிழ்வதுவாய்ச்செய்ததவவிபாகத்தானினைத்தயாவும், யாமளிப்போஞ்சூரியனுங்கிரணமும்போலெமதுளத்திலிருப்பாயென்று, வாமமளித்தனர்பெற்றோரயிலபதிகமலமலர்வதனம் நோக்கிக், காமர்பெறவினிதிருந்தாள்கண்ணுதலும்வலதுதிருக்கடைக்கணோக்கி. (௪௰)

உமையவடன்முகம்பார்த்தார்வியந்தொருவர்க்கொருவர்மனதுவப்பதாக, வைவில்பெருங்கருணையினாலடிக்கடிபார்த்தினிதிருப்பதானோர்வேத, னிமையவர்கண்முனிவர்மலர்மாரிசிந்திப்பே

ரின்பமெய்தியன்னோர், தமைமறந்துதெரிசனைசெய்தகமகிழ்ந் தார்மனைவியொடுஞ்சயிலநாதர். (௪௧)

சத்தியுடன்விடையில்வந்துசிவசயிலந்தனிற்போந்துசகலமா ன, நித்தியராய்ப்பஞ்சகிருத்தியம்புரிந்தங்கினிதிருந்தாரெடுநா ட்டேவி, பத்திமையிற்செய்தவத்தாலண்ணறிருமேனியிலோர்பா கம்பெற்றாள், வித்தகமாமுனிவரரேசிவசயிலநாதர்திருவிளையா ட்டாமால். (௪௨)

இனியவருந்தலமுனிவர்க்கிக்கதையையெடுத்தியம்பியின்ன நீங்கள், வினவியதெல்லாம்புகல்வோமென்றவர்கள்மனதுவிரு ப்புறவேஞானக், கலைகடலாய்ப்புண்ணியகாரணரேயெண்ணெண் கலையுங்கற்றீரென்பா, னெனவருபுராணமுலகினில்விளங்கப்பு கல்சூதனிசைப்பதானார். (௪௩)

7-வது தேவிஇடப்பாகம்பெற்றசருக்கமுற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ௩௯௨.

# எட்டாவது
# சுதெரிசனபாண்டியன்வேழ்விச்
# சருக்கம்.

கலிவிருத்தம்.

போதமாமுனிவரர்பொருவின் மாதவசு
சூதமாமுனிவனைநோக்கித்தொன்மையோய்
மேதகுசிவசயிலத்தின்மேம்படு
காதைகேட்டடவினங்கருத்ததாயினோம். (க)

பண்டுநான்முகனுமப்பதியிலண்ணலைக்
கண்டுபூசித்திடுங்கதையுங்கூறினு
யண்டர்நாயகனையதகிரியுமபூசித்துக்
கொண்டிருப்பதுவும்நீர்கூறக்கேட்டனம். (உ)

நானிலந்தனிற்சிவசயிலநாதனை
மானிடர்பூசித்தவாறுமுண்டெனில்
ஞானமாமுனிவநீர்நவில்கவத்தல
மேன்மையாங்கேட்டினம்வியப்பதாகவே. (ந)

அப்பதிமேன்மையாமறிவதாகநீர்
செப்பியுமனதினந்திருத்தியில்லையால்
முப்பொழுதுணர்ந்திடுமுனிவயாஞ்செயு
மொப்பருந்தவமுமுற்றுடையதாயினோர். (ச)

என்னமாமுனிவரரெடுத்துக்காட்டியே
சொன்னதையுணர்ந்துமெய்ச்சூதன்மானில
மன்னவர்பூசித்தமகிமையாகிய
தின்னமோர்கதையுளதென்னக்கூறினன். (ரு)

(வேறு)

கலித்துறை

கண்ணகன்றஞாலத்தினிற்கவினசிறந்த தலமாம்
பண்ணிறைந்தசெந்தமிழ்விரிபாண்டிதேசத்தில

விண்ணிழிந்திருந்ததுவெனமேன்மையுமுடைத்தாய்
மண்ணிலந்தனிற்சிறந்ததுவாகியமணலூர். (௬)

அன்னகர்க்கிறையாஞ்சுதெரிசனனென்று
மன்னவர்க்குமன்னவன்விதுகுலத்தினில்வந்த
தென்னன்மூன்றுலகத்திலுமவன்பெயர்செல்ல
வின்னிலத்தினுக்கிந்திரனெனவுமிருந்தான். (௭)

அந்தமன்னவன்சகலசாத்திரங்களுமறிந்து
பெந்தநீங்கியேபிரமணபத்தியுள்ளவனாய்ச்
சந்ததஞ்சொலியுறுதியுள்ளவனுமாய்த்தகைவி
லிந்திரியநிக்கிரகங்கள்செய்திருப்பவனுமாய். (௮)

மன்னுயிர்களைத்தன்னுயிரெனவளர்ப்பவனா
யின்னிலத்தினிலொருதுரோகங்களில்லவனாய்
நன்னயமொழியானுயிர்களைநயப்பவனாய்
மன்னுமாதவரிடத்தினிற்பத்திவாய்ப்பவனாய். (௯)

வெருளியென்பதினுருவறிந்திலனுமாயபின்
பகுதியேயுருவாகியபண்புமாயுலகிற்
றகுதியான்வர்க்கரசனுமாகியேதரும
மிருதியார்க்கிருதுக்களில்விருப்பமுள்ளவனாய். (௰)

கரங்கணீண்டதாயக்கடைசிவந்திருப்பவனா
யிரங்குநெஞ்சனாயிமையவர்க்கினியவனாகித்
தரங்கவேலைசூழுலகெலாந்தனிப்புரப்பவனாய்த்
திரங்களாஞ்சிவபத்தியேமிகச்சிறப்பவனாய். (௰௧)

உறுதியாஞ்சிவதீட்சையென்றதுவுமுள்ளவனாய்
மறுவில்சிந்தையிற்றுபரமுதலுளவகைக
ளிறுதியில்லதாஞ்சிவமெனக்கண்டிருப்பவனாய்
நெறியினாலரசுரிமைசெய்திருந்தனன்நெடுநாள். (௰௨)

நாலதாம்பலதானையின்கடல்நனிசிறந்தே
தாலமீதுளமன்னவர்திறைகளுந்தரவே
ஞாலமின்புறவரசுசெய்திருந்திடுநாளில்
மேலதாகவோரறிவுமேற்கொண்டனன்வேந்தன். (௰௩)

திசைவிளங்கிடப்புதல்வனில்லாமையாற்றெளிந்தே
யசுவமேதயாகத்தினைச்செயுங்கருத்தாகி
யிசையுநற்குருசமதக்னிமுனிவரனிடத்தில்
வசையின்மன்னனும்வந்தடிவணங்கிவாய்மையினால். (௰௪)

அப்பமைந்தனில்லாமையாலசுவமேதத்தாற்
செய்யும்வேள்வியிற்கருத்ததாயினன்னனிசிறக்கப்
பொய்யில்கேள்வியோய்மந்திரவிதியினாற்போற்றி
யுய்யுநன்னெறியெனக்கருள்புரிந்திடாயுரவோய். (௰௫)

என்றுமன்னவனிசைத்திடமுனிவரனியம்பும்
நன்றுநீர்நினைத்ததுவுமிந்நானிலந்தன்னிற்
குன்றவார்சிலைநாதனுக்குவப்பதாங்கூறின்
வென்றிமன்னவசெயப்படுமனேகவிக்கினங்கள். (௰௬)

தேவரால்வருங்கலியுகமாகையாற்சிறப்பின்
பாவபெந்தங்கள்வெருவிதமாகவுற்பவிப்ப
தாவதாகியகாலமாம்பீடைகளனுகுந்
தாவில்பன்னவவசுவயாகந்தனைநிறுவில். (௰௭)

மற்றும்வேறுளவேள்விகள்புரிவதுவழக்கா
முற்றவாய்மையிதாமெனமுனிவரனுரைத்தான்
கொற்றவனஃதுணர்ந்தருந்தவனுடன்கூறும்
பெற்றமூர்ந்திடுசிவன்றனக்குவப்பதாய்பெரியோய். (௰௮)

பேசும்வேள்விகளனைத்தினுமிதுபிருதிவியி
லிராசவேள்வியதாகையாலிருநிலமதனி
னீசனார்திருவருளினாலெழின்மறைக்குலத்தோ
ராசியாலுமேமுடித்திடுமன்னவர்க்கழகாம். (௰௯)

என்றுவேந்தனுமியம்பியேமனதினின்பிலனாய்
நின்றகாலையில்வானிடையொருமொழிநிகழும்
வென்றிவேலவயசுவமேதப்பெருவேள்வி
யொன்றுசிந்தையாற்புரிந்திடுகெனவுரைத்திடலால். (௨௰)

அந்தநன்மொழிசெவிப்புலத்தரசனுங்கேட்டே
வந்தபேருவகையினுடல்பரவசமாகிச்

சிந்தைதாற்பரியானித்தினிதிருந்தனன் சிவனை
விந்தையாமுனிவரனதிசயித்துளம்வியந்தே. (உக)

மன்னர்மன்னவவீசுரவாக்கியம்வழங்க
வென்னபுண்ணியஞ்செய்தனையோசெகதீர
னுன்னிடந்தனிலுவப்பதாயிருப்பதுமுளதாலு
சொன்னவேள்வியைமுடித்திடும்படிக்குநீதுவக்காய். (உஉ)

ஆழ்புனற்பொருநையின் கரையதனிலேயமைவாய்
வேள்விச்சாலையுந்திரவியவகைகளும்விரைவாற்
றாழ்விலாவகையியற்றெனமுனிவரன்சாற்றச்
சூழ்கடற்புவியரசனுமமைச்சர்பாற்சொல்வான். (உங)

தண்பொருநையின்கரைதனில்யாகசாலைகளும்
விண்படுந்திரவியங்களுமிகுதியாயமைப்பீர்
மண்படுமுலகினிலுளமறையவாக்கூவி
எண்படும்பெருவேள்வியாமியற்றுகவென்றே. (உச)

மந்திரிகளையேயவினன்வையகமன்னா
னந்தலிற்சமதக்கினியரசனைநோக்கி
யிந்தவேள்விசெய்வதற்குளகுணமொழில்வேத
மூநதுவாம்பரிதெரிந்ததைமந்திரமுறையால். (உரு)

சாந்திகள்செய்துசாத்திரவிதிப்படிதன்று
லேய்ந்தநற்கிரியையுமபுரிந்திடுமவரிடத்தில்
வாய்ந்தவாம்பரியுதவியேவளாத்திடவேண்டு
மாய்ந்தகேள்வியிலுயர்ந்தவுபாத்தியாயரையும். (உசா)

கூட்டியப்பரிகுவலயந்தனில்விடவேண்டுங்
கேட்டிமன்னவவெனமுனிமொழிவதைக்கேட்டு
வாட்டிறன்மன்னன்குருமொழிதனிலனுவழாம
லூட்டுமவேள்வியிற்குள்ளனமுறைநடத்தினனால் (உஎ)

ஓமசாலைகள்வேதிகைகுண்டங்களுமாற்றிக்
காமர்போற்றிடவிதம்விதமாயலங்கரித்துச்
சேமமேமுதலாகியதிரவியவகைக
ளாமெனும்படிக்கமைச்சருமமைத்துவந்துறைந்தார். (உஅ)

புக்கபோதிலத்திசையுளமன்னவர்பொருந்தி
மிக்கசத்தியகீர்த்தியைவணங்கினர்வெருவி, (௩௬)

வணங்கிமன்னவருடன்வரமனமகிழ்ந்தெய்திக்
குணங்கொள்வாம்பரியினைக்குடதிசையினில்விடுத்தே
பணங்கொள்சூட்டராசுமந்தபார்நெருங்குபல்படையோ
டிணங்கியப்புரவியைத்தொடர்ந்திளவலுநடந்தான். (௩௭)

குடதிசைப்பரிசெலவிதிமுறைதருறையாமல்
நடவியேவரும்பொழுதினிற்சயிலநாயகரும்
படவிகாவலன்சுதர்சனன்றனைமிகப்புரக்குங்
கடமையாற்றிருவுளத்தினிற்கருணைகூர்ந்தருளி. (௩அ)

முந்தவெய்யசூர்முடிக்கயிற்கடவுள்சண்முகவன்
றந்திமாமுகற்கிளையவன்சரவணத்துதித்தோன்
கந்தவேள்மலர்க்கடம்பனைக்கருணையானோக்கி
யெந்தையாஞ்சிவசயிலநாயகனியம்பிடுமால். (௩௯)

சிட்டமாமறைமுனிவரர்சிறுவராய்ச்சென்றே
யட்டதிக்கையுமடக்கியித்திசையினிலாவில்
மட்டிலாதவேகத்தொடுவரும்பரிபற்றிக்
கட்டுவாயொருதருவினிலென்றனன்கடவுள். (௪௰)

அண்ணலார்திருவருள்புரிந்திடவிரைந்தாங்கு
புண்ணியன்மறைமுனிவரர்சிறுவராய்ப்போந்தே
யெண்ணிலாதபதாதியினிடைவரும்பரியைக்
கண்ணினுறெதிர்வந்திடக்குமரவேள்கண்டான். (௪௧)

கண்டபோதுபதாதியாங்கடலையுங்கடந்து
யண்டர்நாயகன்மகன்விளையாடுவான்போல
மண்டுவேகமாய்வரும்பரிமலர்க்கையாற்பற்றிக்
கொண்டுபோயொருதருவினிற்பிணித்தனன்குமரன். (௪௨)

இச்செயல்கண்டுசத்தியகீர்த்திமற்றினையோர்
பச்சிமத்திசைநடவியபண்புடைப்பரியை
யச்சமில்லவனுகவோரருமறைச்சிறுவன்
மிச்சமாகவும்பற்றினனெனமனம்வியந்தே. (௩௩)

செழுமறைக்குலச்சிறுபிளாயாவனீயெமது
வழுவின்வேழ்வியால்வரும்பரிதனைமதியாதிப்
பொழுதுபற்றிநீபிணித்தனைபழிவிலாபோவைப்
பழுதுவந்துறும்விரைவில்நீவிடுகடுபரியை. (௪௪)

என்றுசத்தியசீர்நிடற்றியாவருமிசைத்தார்
இன்றமாமறைச்சிறுவனுமவரைநேர்நோக்கி
நன்றுநன்றுனும்விடுவதில்மற்செய்துநம்மை
வென்றுநும்பரிகொள்ளுவீரெனவிளம்பினனால். (௪௫)

அவ்வுரையவர்கேட்டனுமதிசயித்திவன்மேல்
வெவ்வமர்புரிநாடல்செகுத்திடுவதாய்வெகுண்டே
பவ்வமார்த்தெழுந்ததுவெனச்சிறுவன்மேற்படர்ந்தா
ரெவ்வமில்லதோர்குறுமுனியெனநின்றனன்கோன் (௪௬)

செய்யநான்மறைச்சிறுவனென்றெண்ணினோமவனுங்
கையிலேந்தியவேலுமாய்நின்றனன்கண்முன்
வெய்யநாமிவன்றனைக்கொன்றுற்றோடமேவாதென்
றையநீங்கியேசிறுவனைவளைந்தமர்புரிந்தார் (௪௭)

சூலமாமழுத்தவுவினிற்றொடுசரம்பிண்டி
பாலமேமுதலாகியபற்பலபடைகள்
வேலனுமறைச்சிறுவன்மேல்விடுத்துநின்றார்த்தார்
சாலவுநகைபுரிந்துநின்றனன்சிவன்றனயன் (௪௮)

விட்டபற்பலபடையெலாமவன்றிருமெய்யிற்
பட்டபோதினிலொன்றுநூறாய்த்துணிபட்டுக்
கெட்டவாறெலாங்கண்டனர்கிளரொளிக்கதிர்வேல்
தொட்டுவிட்டனன்சூருளந்தொலைத்திடுந்தொல்லோன் ()

வேறு.

கடகரித்திரளிலேயோரரிகனன்றெழுதல்போலும்
படவரவினத்தைத்தாக்கும்படாசிறைக்கலுழன்போலுங்
கடவரைதனிலுஞ்சூரன்றனுவரைதனிலும்விட்ட
க[illegible]விடுகதிர்வேல்சென்றுதுணித்ததச்சேனையெல்லாம் (௫௰)

இச்செயல்கண்டுசத்யகீர்த்தியுமெழுந்துபோந்து
மச்சிறுமறையோன்றன்னையடர்த்ததிகோபனாகி
மெச்சியமறைப்பிள்ளாய்நீமேல்விளைவதனையோரா
தச்சமற்றிதுசெய்தாயறிவிலாய்பரிவிடாயேல். (௫௧)

பெருமறைக்குலத்துக்கெல்லாம்பிழையெனப்பிறந்தபேதாய்
மருவலனாகநின்றாய்மறையவனென்றும்பாரே
னிருநிலங்காக்குமன்னர்க்கிரக்கமிராதுன்றன்னை
விரைவினிற்கொல்வேன்வெய்தின்விடுபுரவியினையென்றான். (௫௨

என்னவும்புகன்றமாற்றமிருசெவிவெதுப்பக்கேட்டுப்
புன்னகைபுரிந்துநீயும்போர்த்தொழிற்குரியனாகி
லென்னைநீசெயித்துக்கட்டியிருக்கின்றபரியைக்கொண்டே
நின்னுடைநகரிற்செல்வாயென்றனனிகரிலாதான். (௫௩)

சிறுமறையவன்சொல்மாற்றஞ்செவிப்புலன்றன்னிற்கேட்டு
மறுமொழியுரைப்பதின்றிவரிசிலைகரத்தில்வாங்கி
யுறுகணையைந்துதொட்டேயுருமெனச்செருவிட்டா
னறுமுகக்கடவுள்வேலாலதுபொடியாகச்செய்தான். (௫௪)

தடக்கையிலிருந்தவேலைச்சத்தியகீர்த்திமீது
விடப்பதைப்பொடுங்கிமண்மேல்வீழ்ந்தனன்வீழ்தலோடும்
கடற்பெருந்தானைதன்னிற்கழிந்தவர்போகநின்றோ
ரடற்கஞ்சியிரிந்துபோனாரரசனுக்குரைப்பதாக. (௫௫)

சென்றவர்மணலூர்சேர்ந்துசுதர்சனன்றன்னைநோக்கி
வென்றிவேலிறைவவேழ்விவிடுத்தநம்பரிகிழக்கு
தென்றிசைதனையும்வென்றுகுடதிசைதிரும்பித்தாங்கே
நின்றொருமறையோன்மைந்தனேரலனாகப்போந்தே (௫௬)

கடும்பரிதன்னைப்பற்றிக்கட்டினன்புரவிதன்னை
விடும்படிக்கிளவல்போந்துவேண்டியதுரைத்துங்கேளா
தடும்பரிசுடையவெம்போராற்றினனவனைச்சுற்றி
விடும்பொழுதவன்கைவேலாலிளவலைத்தரையில்வீழ்த்தான். (௫௭)

எனவவர்புகன்றமாற்றமிருசெவிதனிலுஞ்செம்பைக்
கனலுறக்காய்ச்சிவார்த்ததெனமனங்கனன்றுமன்னன்

சினமதகரிகள்மான்றேர்திறல்வயப்பரிகள்வெற்றிக்
கனைகழல்வீரரோடுங்கடலெனப்புடவிமீது (௫௮)

ஆர்த்தெழுமோசையண்டமளந்தனவமரர்யாரும்
வேர்த்திடுமெய்யராகிவிண்ணைவிட்டகல்வதானார்
போர்த்தொழிற்குரியனாகிப்புரவலன்போந்தபோது
தேர்த்தடஞ்சில்லியோசைதிசைசெவிடெறிந்ததன்றே (௫௯)

கதழுறுகலினப்பாய்மாகாலின்மேன்மிதப்பக்காட்டி
மதகரிக்கலுழியாறுமண்மிசைபரந்துசெல்லப்
புதையிருளொழிக்கும்வெய்யோன்பொழிகதிரென்னவீர
ரதிர்குரலெழுப்பியேந்துமயிற்படைவெயிற்குலாவ (௬௰)

கொற்றவெண்கவிகையீட்டங்கோடிசந்திரர்கள்வானி
னுற்றிடுங்காட்சிகாட்டவுயர்நெடும்பதாகைமேல்பாற்
பெற்றிடுமதியமெண்ணில்பிறங்கினதென்னமாதர்
கற்றைப்பங்கவரிவீசக்கால்செய்வட்டங்களாட. (௬௧)

ஆடகத்தடந்தேர்பூண்டவணிமருக்கரைவானிற்றுவ
மாடுறநெருங்கிவெய்யவரிசிலையுழவர்செல்லக்
கேடகம்புடைத்தமஞ்சினகிளரொலியெனவுங்காட்ட
நாடருந்தடத்திற்போன்றுநகைக்கும்வாளுழவர்போத. (௬௨)

சல்லடைந்துடாரிபம்பைதண்ணுமைதுடிநற்பேரி
பல்லவவாத்தியஞ்சேனைபரவையின்குரைகள்காட்டச்
சொல்லருந்தாரைகாளஞ்சிறுவளைசின்னத்தோடும்
பல்லியந்துவைக்குமோசைபரந்தது திசைகளெங்கும். (௬௩)

செங்குருதிகளைக்காலுந்திருந்தயிற்புலவுவேட்டுக்
கங்கம்விண்பரந்துசெல்லக்கையுறுவேலைநீங்கிப்
பொங்கியவுவகையோடும்பொசிப்பினுக்கிடமாச்சென்றே
யங்கைகள்புடைத்துப்போந்ததளப்பிலவலகைகூளி (௬௪)

வேறு.

எல்லவன்றொளிகரந்தனகவிகையீட்டத்தாற்
கொல்லிமன்னவன்கொடியொடுங்கினமதிகுலத்து.

வல்லவன் மகரக்கொடிவெருக்கலாற்பணைத்தார்
வில்லவன்கொடிநாணொடும்வணங்கினவெருவி (௬௫)

புரையிலாநவமணிமகுடத்தின்மேற்பொலிய
விரைசெய்வாகையும்புனைந்துவீரக்கழல்வீக்கி
யுரைசிறந்தபஞ்சாக்கரகவசமுச்சரித்து
வரைகொள்மெய்யில்வெண்பொடிதரித்தொளிறுவாள்வாங்கி

பொங்குமின்னிசைவீணைநல்லியாழிசைபொலிய
மங்கலந்தருபாடல்கள்திசைதொறுமலியத்
துங்கமாமறைவேதியராசிகள்சொல்லத்
திங்களின்குலத்துதித்தவன்தேர்மிசைபோனான் (௬௭)

அரசர்வெள்ளமுமமைச்சர்கள்வெள்ளமுநெருங்கப்
புரைசையானையின்றிரள்களும்வரையெனப்பொலியத்
தரைசிறந்திடவெடுத்தபேரனந்தனுஞ்சலிப்பக்
கரையில்சேனைமாக்கடல்நடந்ததுகடுகடுப்பில் (௬௮)

கொய்யுளைவயப்பரிநடத்தியகுரத்தூளி
வையமெங்கணும்பரந்துமீக்கொண்டனவளர்ந்து
செய்யவானமாய்த்தூர்த்தலாற்செழுங்கதிர்பரப்பும்
வெய்யவாதபங்குளிர்ந்ததுமறைந்ததுவிசும்பு (௬௯)

விரைவினேகியசேனைமாக்கடலிடைவிளங்கும்
புரைசையானைகளிருசெவியசைப்பதுபொருப்புக்
கரசதானமைநாகவெற்பிருசிறகடித்துப்
பரவைதன்னிலுலாவுதல்போன்றனபலவாய் (௭௰)

இன்னதன்மையின்சேனைகளுடன்விரைந்தெழுந்தே
மன்னர்மன்னனுங்குடதிசைநோக்கியேவருவா
னன்னகாலையிலருமறைச்சிறுவனுங்குமரன்
மின்னகுசுடர்விடுங்கதிர்வேல்கையில்விளங்க (௭௧)

பிடித்துநின்றனன்குணதிசைமுகப்பிரியாம
லடுத்துவந்திடுஞ்சேனைகாவலருமார்ப்பரித்துக்
கடுத்தவாண்முகமுடையராய்க்கட்பொறிகதுவ
மடித்தவாயெயிற்றுன்னிநாற்றிசையிலும்வளைந்தார் (௭௨)

விதாருலத்துமன்னவனிருகண்ணுறவிளங்குங்
கதிரயிற்படைக்கரத்தராய்க்கருணையங்கடலா
யதிசொரூபராயருமறைச்சிறுவராயவற்று
ளெதிர்துலங்கிடக்கண்டனனிரதநின்றிழிந்தே (௭௩)

சேனைவீரரைநிறுவியேதிறலடர்ப்படர்க்கை
யீனவெனதிர்விளங்கியசிறுவரைநோக்கி
ஞானவீரராய்நான்மறைமுனிபுதல்வனுமா
யானனந்திருவருள்சொலிப்பவருமாயழகாய் (௭௪)

வாய்ந்தமெய்யராய்மன்னுயிர்தனைப்புரப்பவரா
யேய்ந்தநற்புயமுடையராயருளிலக்கணராய்த்
தோய்ந்ததேயசவுடையராய்நலந்துலங்கினரா
யாய்ந்தகல்வியராய்ச்சகலமுமறிந்தவராய் (௭௫)

கண்டவர்மனங்கவர்ந்திடுபவருமாய்க்கதிர்வேற்
கொண்டகையராய்க்குணப்பெருங்கடலுமாய்நின்ற
பண்டைநான்மறைச்சிறுவர்நீர்யார்பதியாது
விண்டுரைத்திடீரென்னவேவிளம்பினன்வேந்தன் (௭௬)

பெருவயத்திறன்மன்னவனிவ்வகைபேச
வொருதனிமறைச்சிறுவரும்வேந்தனுக்குரைப்பார்
பொருகளத்தினிலமர்த்தொழிற்புரிந்திடப்போந்து
மருவலர்க்கிதவசனங்கள்வழங்குவவழக்கோ (௭௭)

சமர்புரிந்திடத்துடங்கியேயளப்பருந்தானை
திமிரவேலைபோல்வளைந்தனைபோர்செய்வதின்றி
நிமிருநன்மொழிமாற்றலர்முன்னின்றுநிகழ்த்தி
யமர்புரிந்திடன்மறப்பதுமன்னவர்க்கழகோ (௭௮)

நேத்திரமனமாண்மைநேரலர்மிசைநிறுவிச்
சாத்திரப்படிபொருவதுபுரவலர்தருமங்
கோத்திரங்குலங்குணங்களுங்கேட்டுமுன்குறுகித்
தோத்திரங்கள்சொல்வதும்படைவீரர்க்குத்தொழிலோ (௭௯)

என்றுமாமறைச்சிறுவனுங்குமரவேளியம்ப
நின்றமன்னவன்வெகுளியாய்நெஞ்சகங்கனன்று

வென்றிவேற்படைத்தானையையேவியேவிரைவாற்
சென்றுவாயபரிபிணித்திடுந்தேரிலேறினனால் (௮௰)

தேரிலேறியேசினமதகரிவயப்புரவி
வீரர்யாவருமவெவ்வமாவிளைத்திடுங்காட்சி
சூரியன்றனையிருளணுகினமெனத்தோன்றக்
கூரிலையவேற்குமாரவேள்குறுகனைபுரிந்தார். (௮௧)

ஆனகாலையிலயிற்படையின்முகப்பகழி
சேனைகாவலர்விடுத்தனர்திசைதொறுஞ்செறுமி
மீனவன்சிலைவாங்கியேசிறுவாமேல்வெகுண்டு
வானமாரிபோற்பொழிந்தனனவடிக்கணைதெரிந்து. (௮௨)

நின்றபடைமறைப்பரிவரைய்கிரிலாதவரும்
வென்றிவேல்கரத்திருந்ததைவிடுத்தனர்மிகவு
மொன்றுபத்துநூறாயிரமளவில்பல்லுருவாய்ச
சென்றுசேனையிற்றாக்கினதிமைப்பிலாதிகைப்ப. (௮௩)

அளப்பிலாதகூரயிற்படைதிசைதொறுமணுகித்
தளக்கடல்சுவற்றிடவுடற்றலைகளைத்தடிந்து
களப்படுத்ததுவெண்ணிலாக்கவந்தமதினொடு
புளைக்கையானைகள்கிடந்ததுவரையெனப்புரண்டு. (௮௪)

தந்திகள்மருப்புகடனையயிற்படைதடிந்தே
சிந்தியவிசைதனிற்பலவாகமேற்றிசையிற
பந்திபந்தியாய்விண்மிசைபடர்ந்தனபகரி
லந்திவான்பிறையெனவும்வயங்கியதாமால். (௮௫)

விண்ணளந்திடுங்கொடிகளுமறுந்துகீழ்விழுவ
தெண்ணிலாதனபறவைகளிறந்தபுட்கலத்தை
யுண்ணவானகமிழிந்துலவியதனையொப்ப
மண்ணளந்திடும்போர்க்களமெங்கணுமலியும். (௮௬)

கூரயிற்படைதிசைதொறுந்திசைதொறுங்குழுமுந்
தேரினையறுத்ததிற்பிணித்திடும்பரித்திரள்க
ளூர்பதங்களையறுத்திடவரைகள்போலுருண்டு
பாரிடத்தினிற்கிடப்பனபொருகளப்பரப்பில். (௮௭)

